மலர் 15 இதழ் 56

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd. M No. 7897

Phone No. 76190, 76__

“நவமணி”

சந்தா விகிதம்

1—9—74 முதல்

தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் ஏஜண்டு மூலம் | தபால் மூலம் |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 7·50 | ரூ. 8·00 |
| 3 மாதம் | ரூ. 22·50 | ரூ. 24·00 |
| 6 மாதம் | ரூ. 45·00 | ரூ. 48·00 |
| 1 வருடம் | ரூ. 90·00 | ரூ. 96·00 |

# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 6—11—74 புதன் வெளியூர் 7—11—74 வியாழன்

குப்பையிலிருந்து பெட்ரோல்

4-ம் பக்கம்

## தமிழ்நாடு அரசின் கப்பல் கம்பெனிக்கு

# அண்ணா - பெரியார் பெயரில் கப்பல்கள்

## கருணாநிதி அறிவிப்பு

சென்னை, நவ: 6—தமிழ்நாடு அரசின் கப்பல் போக்குவரத்துக் கழகம் வாங்கும் இரு கப்பல்களுக்கும் பெரியார் பெயரும் அண்ணாவின் பெயரும் வைக்கப்படும் என்று முதல்வர் கருணாநிதி இன்று தெரிவித்தார்.

இந்த இரு கப்பல்களும் இவ்வாண்டு கடைசிக்குள் வந்து சேர்ந்துவிடும் என்றார் அவர்.

முதல்வர் கருணாநிதி மேலும் கூறியதாவது;-

நமது மாநிலத்தில் அமைக்கப்பட்டுள்ள பூம்புகார் கப்பல் போக்குவரத்து கழகத்தின் சார்பில் 2 கப்பல்கள் வாங்கப்படுகின்றன. ஒன்று இந்தியக் கப்பல் மற்றொன்று ஜப்பானியக் கப்பல்”

இந்தியக் கப்பலை வாங்குவதற்கான பேச்சுவார்த்தைகள் முடிந்து அக்கப்பல் நவம்பர் இறுதியில் ‘பூம்புகார்’ கப்பல் கழகத்திடம் ஒப்படைக்கப்படும்.

ஜப்பானியக் கப்பலை வாங்குவது பற்றிப் பேச்சுவார்த்தைகள் முடிந்து, தொடர்ந்து ஆய்வு மேற்கொள்வதற்காக நமது அதிகாரிகள் ஜப்பான் செல்கிறார்கள்.

அநேகமாக அக்கப்பல் டிசம்பர் மாதத்தில் கப்பல் கழகத்திடம் ஒப்படைக்கப்படலாம் அது கொடிக் கப்பலாக விளங்கும்.

இந்தஇரண்டு கப்பல்களும், கல்கத்தாவிலிருந்து சென்னைக்கு மின்சார வாரியத்திற்கான நிலக்கரியைக் கொண்டுவருவதற்குப் பயன்படுத்தப்படும்.



முதல்கப்பலுக்கு ‘‘பெரியார்’’ என்றும் இரண்டாவது கப்பலுக்கு ‘‘அண்ணா’’ என்றும் பெயர் வைக்கப்படும்.

இவ்வாறு முதல்வர் கருணாநிதி கூறினார்,

பஞ்சாலை ஊழியர் போனஸ் தகராறுபற்றிநிருபர்கள் முதல்வர் கருணாநிதியிடம் கேட்டபோது இது பற்றி அமைச்சர் ராசாராம் பேச்சு நடத்தி வருவதாகத் தெரிவித்தார்.

பூம்புகார் கப்பல் போக்குவரத்து கழகத்தினர் தலைவரான ராம் நிருபர்களிடம் பேசுகையில், இரு கப்பல்களைப் பற்றிய தகவல்களைத் தெரிவித்தார்.

முதல் கப்பல் 10,900 டன் எடை ஏற்றும் திறன் கொண்டது. இன்னொரு கப்பல் 7,750 டன் எடை ஏற்றும் திறன் கொண்டது.

இந்தியக் கப்பலின் விலை ரூ. 75 லட்சம். ஜப்பானியக் கப்பல் விலை ரூ. கோடிக்கு மேல் இருக்கும்.

தமிழக அதிகாரிகள் போய் பார்த்த பிறகு முடிவு எடுக்கப்படும்.

கல்கத்தாவிலிருந்து நிலக்கரி ஏற்றி சென்னைக்கு வரும் இக் கப்பல்கள் பிறகு பாண்டிச்சேரி சென்று அங்கிருந்து உணவுத் தானியங்களை முக்கியமாக கோதுமை ஏற்றிக் கொண்டு கல்கத்தா செல்லும். இவ்வாறு அவர் சொன்னார்.

இந்திய அதிகாரிகள் நாளை ஜப்பானுக்கு கிளம்புகிறார்கள்.

இந்தியாவில் கப்பல்களை வாங்கும் முதல் மாநிலம் தமிழகமே என்று போக்குவரத்து அமைச்சர் ராமச்சந்திரன் தெரிவித்தார்.

### போலீஸ் கமிஷனர் எச்சரிக்கை

## பஸ் படிக்கட்டில் பயணம்: 23 பேர் மரணம்

சென்னை, நவ. 6—சென்னை நகரில் இந்தஆண்டு இதுவரை பஸ் படிக்கட்டில் பயணம் செய்தவர்கள், ஏறும்போது தவறி விழுந்தவர்கள், இறங்கும்போது தவறி விழுந்தவர்கள் ஆகிய விபத்துக்களின் மூலம் 23 பேர் மரணம் அடைந்திருப்பதாக போலீஸ கமிஷனர் ஷெனாய் இன்று தெரிவித்தார்.

இவர்களில் பஸ் படிக்கட்டில் பயணம் செய்தபோது இறந்தவர்கள் 6 பேர். பஸ்ஸில் ஏறும்போது விழுந்து இறந்தவர்கள் 7 பேர். பஸ்ஸிலிருந்து இறங்கும்போது விபத்துககுள்ளாகி இறந்தவர்கள் 10 பேர்.

இதே போல மோட்டார் சைக்கிள், ஸ்கூட்டர் ஆகியவற்றில் செல்பவர்களில் விபத்துக்குள்ளாகி இறந்தவர்களின் எண்ணிக்கை கடந்த ஆண்டைவிட இந்த எங்கு அதிகரித்திருக்கிறது என்றும் ஷெனாய் தெரிவித்தார்.

அவை விவரம் வருமாறு;—

71-ல் 13 பேர், 72-ல் 18

5-ம் பத்தி பார்க்க

### நெஞ்சுருக்கும் நிகழ்ச்சி:

## சென்னை அழகி சுஜாதா லாரி விபத்தில் மரணம்

சென்னை, நவ. 6—அண்மையில் சென்னை அழகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சுஜாதா லாரி விபத்து ஒன்றில் இன்று பரிதாபகரமாக மரணமடைந்தார்.

பெங்களூர் சென்றிருந்த சுஜாதா இன்று காலை சென்னை திரும்பினார். சீதாலட்சுமி என்ற மற்றொரு பெண்மணியும் 6 வயதான பிரேமா என்ற சிறுமியும் சுஜாதாவுடன் வந்தனர்.

சென்ட்ரல் ரெயில் நிலையத்தில் வந்திறங்கிய மூவரும் ஆட்டோ ரிக்ஷாவில் ஏறி, பூந்தமல்லி நெடுஞ்சாலையில் சென்றுகொண்டிருந்தனர்.

அப்போது பின்னால் வந்த லாரி ஒன்று ஆட்டோ ரிக்ஷாவில் மோதியது. ஆட்டோ ரிக்ஷா டிரைவரும் பயணம் செய்த மூவரும் படுகாயம் அடைந்தனர்.

சுஜாதாவுக்கும் சீதாலட்சுமிக்கும் தலையில் பலத்தகாயம் ஏற்பட்டது.

இவர்கள் உடனடியாக கீழ்ப்பாக்கம் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டனர்.

சிகிச்சை அளிக்கப்பட்டும் பலனளிக்காததால் சுஜாதா பரிதாபமாக இறந்தாள்.

சீதாலட்சுமியும் குழந்தை பிரேமாவும் சிகிச்சை பெற்று வருகின்றனர்,

ஆட்டோ ரிக்ஷா டிரைவர் பிரக்ஞையற்ற நிலையில் பொது மருத்துவமனையில் சேர்க்கப்பட்டிருக்கிறார்.

லாரியை ஓட்டிவந்த பக்தவத்சலு கைது செய்யப்பட்டார்.

சுஜாதா சென்னை அழகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர். தாஜ்கோரமண்டல் ஓட்டலில் வேலை செய்கிறார்.

## கோட்டை முன் தர்ணா: தமிழ்நாடு என்.ஜி.ஓ. கூட்டமைப்பு கண்டனம்

சென்னை, நவ. 6—சென்னை கோட்டைமுன் நாளை ‘தர்ணா’ நடத்தப்போவதாக அறிவித்திருப்பது ஊழியர்களை திசை திருப்புவதாகும் என்று என்.ஜி.ஓ சங்க கூட்டமைப்பு அறிவித்திருக்கிறது.

தமிழ்நாடு என். ஜி. ஓ. சங்கத்தலைவர் சிவ. இளங்கோ தலைமைச் செயலக அலுவலக சங்கத் தலைவர் ஜி. ராமகிருஷ்ணன், ஊர்தி ஓட்டுநர் சங்க தலைவர் எம். வெங்கடேசன், கடைநிலை ஊழியர் சங்கத் தலைவர் ஜி. துளசங்கம் நர்சுகள் சங்கத் தலைவி செல்வி ராஜம், 2-ம் நிலை தமிழாசிரியர் சங்கத் தலைவர் புலவர் புகழேந்தி ஆகியோர் இன்று ஒரு கூட்டறிக்கை வெளியிட்டுள்ளனர்.

நாளை தலைமைச் செயலகம் முன்பு நடத்தப்போவதாக அறிவித்திருக்கும் தர்ணாவுக்கும்: என். ஜி. ஓ. சங்கக் கூட்டமைப்புக்கும் சம்பந்தமில்லை என்று அந்த அறிக்கையில் அவர்கள் தெரிவித்துள்ளனர்.

இதற்கு முன் பல போராட்டங்களை வெற்றிகரமாக நடத்திக் காட்டிய நாம், நமது கோரிக்கைகள் விரைவில் வெற்றிபெறும் முறையில் செயல்பட்டுவரும் இந்தச் சூழ்நிலையில் அரசு ஊழியர் ஒற்றுமையைக் குலைக்கும் வகையில், போராட்டத்தை திசை திருப்பி வன்முறைக்கு வித்திடும் பணியில் ஒரு சில குழப்ப சக்திகள் நாளை தர்ணா நடத்தப் போவதாக அறிவித்திருக்கிறார்கள்

விரல்விட்டு எண்ணக்கூடிய இந்த ஊழியர் விரோத கும்பல், அரசு ஊழியர் நடவடிக்கைக் குழு என்ற பெயராலும், தமிழ்நாடு என். ஜி. ஓ யூனியன் என்ற பெயராலும், செய்துவரும் போலி பிரச்சாரங்களை நம்ப வேண்டாம் என்று கூட்டறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது.

### அமைச்சர் ராமச்சந்திரன் தகவல்

## அரசு பஸ் தொழிலாளர் போனஸ் உடன்பாடு

சென்னை, நவ. 6—அரசாங்க பஸ் போக்குவரத்து தொழிலாளருக்கான போனஸ் குறித்து சம்பந்தப்பட்ட யூனியனுடன் பேச்சு வார்த்தை சுமுகமாக முடிந்துவிட்டது விரைவில் போனஸ் தொகை வழங்கப்படும்.

இத்தகவலை இன்று போக்குவரத்து அமைச்சர் ராமச்சந்திரன் நிருபர்களிடம் தெரிவித்தார்.

### ஜெயப்பிரகாஷ் சென்னை வருகிறார்

## பீஹார் இயக்கம்: எம்.ஜி.ஆருக்கு எதிராக மாநாடு

சென்னை, நவ. 6—இந்திரா அரசுக்கு எதிராக, சர்வோதயத்தலைவர் ஜெயப்பிரகாஷ் நாராயணன் தலைமையில் ‘பீகார் இயக்கம்’ நடைபெற்று வருகிறது அல்லவா? அந்த ஜெயப்பிரகாஷுக்கு எதிராக அ. தி. மு. க. தலைவர் எம். ஜி. ஆர். சர்வகட்சி மாநாடு ஒன்றைத் தமிழ்நாட்டில் கூட்டப்போவதாக அறிவித்திருந்தது தெரிந்ததே.

இதுபற்றி பிரதமர் இந்திராவிடம் போய் எம். ஜி. ஆர். பேசியதும், அதற்குப் பிரதமர் இந்திரா, ‘‘ஏதோ ஒன்று செய்யுங்கள்’’ என்று அலட்சியமாகப் பதில் அளித்ததும் தெரிந்ததே,

அமெரிக்காவில் இருக்கும் எம். ஜி. ஆர். தமிழ்நாடு திரும்பியதும், ஜெயப்பிரகாசருக்கு எதிராக மாநாடு நடத்தப்போவதாக அறிவித்திருக்கிறார்- இதற்கிடையில் ஜெயப்பிரகாஷ் நாராயணனின் பீகார் இயக்கத்துக்கு ஆதரவு தெரிவித்தும், எம். ஜி. ஆரின் போராட்டத்தை எதிர்த்தும் தமிழ்நாட்டில் ஒரு மாநாடு நடத்தப்படுகிறது-

இந்தத் தகவலை தமிழ்நாடு சோஷலிஸ்டுக் கட்சித் தலைவர்களில் ஒருவரும், பிரபல வக்கீலுமான எம். மீனாட்சிசுந்தரம் திருச்சியில் நடைபெற்ற ஒரு மாநாட்டில் தெரிவித்தார். இந்த மாநாடு பீகார் இயக்கத்துக்கு ஆதரவு தெரிவித்த மாநாடு என்பது குறிப்பிடத்தக்கது.

### ஜெயபிரகாஷ் வருகிறார்

தமிழ்நாட்டில் எம். ஜி. ஆருக்கு எதிராகவும், பீகார் இயக்கத்துக்கு ஆதரவாக நடத்த இருக்கும் மாநாட்டுக்கு ஜெயப்பிரகாசர் அழைக்கப்பட்டுள்ளார் என்றும், நிச்சயம் அவர் வருவார் என்றும் மீனாட்சி சுந்தரம் குறிப்பிட்டார்.

திருச்சி மாநாட்டில் பேசிய சர்வோதயதலைவர் எஸ், ஆர். சுப்ரமணியம், இந்திராவுக்கு எதிரான பீகார் இயக்கத்தின் லட்சியங்களைத் தமிழ்நாட்டு மக்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்றும், நாட்டை வாட்டும் தீமைகளிலிருந்து மக்களைக் காக்க வல்லவர், ஜெயப்பிரகாஷ் நாராயணன்தான் என்றும் குறிப்பிட்டார்.

### மேலும் பலர் விலகுகிறார்கள்

## வேலப்பன் விலகல் எதிரொலி: மாணவர் தலைவரும் விலகினார்

சேலம், நவ. 6—வேலப்பன் எம்.எல்.ஏ. அ.தி.மு.க.வில் இருந்து விலகியதால் சேலம் மாவட்ட அ.தி.மு.க., கலகலத்துப் போய்விட்டதாகக் கூறப்படுகிறது.

சேலம் மாவட்ட அதிமுக அமைப்பாளராக இருந்து வந்த எம். வேலப்பன். அ.தி.மு. க. வின் மாநில சுயாட்சி எதிர்ப்பு, மற்றும் அதன் நடவடிக்கைகள் பிடிக்காததால், அ. தி. மு. க. விலிருந்து ராஜினாமா செய்து வேலப்பன் தி. மு. க. வில் சேர்ந்தார்.

இந்தச் செய்தி அ. தி. மு. க. தலைமைக்கு பெரும் அதிர்ச்சியை ஏற்படுத்தியது.

அ. தி. மு. க. அவைத் தலைவர் முத்துசாமி எம். பி., வேலப்பன் ராஜினாமாசெய்த அன்றே அவசர அவசரமாக சேலத்துக்கு வந்தார்.

நேற்று காலை முதல் இரவு வரை பல அ தி மு க வினரையும்அவர் சந்தித்துப்பேசினார்.

வேலப்பன் ராஜினாமா, கட்சியைப் பாதிக்குமா என்று கேட்டதற்கு முத்துசாமி கருத்துக்கூற மறுத்தார்.

முத்துசாமி நேற்று இரவே சென்னைக்கு திரும்பிவிட்டார்

### மாணவர் தலைவர் விலகல்

வேலப்பன் ராஜினாமாவைத் தொடர்ந்து சேலம் அ.தி.மு.க. வில் இருந்து பலர் ராஜினாமா செய்வர் என்று கூறப்படுகிறது.

மாணவர் தலைவர் ‘ரவி’ என்பவர் ஏற்கனவே ராஜினாமா செய்துவிட்டார். நாங்கள் ஒன்றும் விசிலர்கள் அல்லர் என்றார் ரவி .

### வேலப்பன் ஆதரவாளர்கூட்டம்

வேலப்பன் சென்னையில் இருந்துதிரும்பியதும், அவரது ஆதரவாளர்களின் கூட்டம் ஒன்று நடைபெறும். இந்தக் கூட்டத்தில் அ. தி. மு. க. விலிருந்து கூண்டோடு விலக முடிவு மேற்கொள்ளப்படும் என்று தெரிகிறது.

1-ம் பத்தி தொடர்ச்சி

பேர், 73-ல் 11 பேர், 74-ல் 21 பேர் இறந்திருக்கிறார்கள்.

இது குறித்து, பஸ் டிரைவர்கள், பஸ் கண்டக்டர்கள் ஆகியோருக்கு எச்சரிக்கை விடுத்து ஷெனாய் கூறியதாவது:-

பஸ் டிரைவர்கள், கண்டக்டர்கள் ஆகியோர் பிரயாணிகள் பஸ்ஸை விட்டு இறங்கிய பிறகே வண்டியை எடுக்க வேண்டும். இதே போல பிரயாணிகள் ஏறிய பிறகே கண்டக்டர் விசில் கொடுத்து, அதன் பிறகு வண்டியை எடுக்கவேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் பஸ் படிக்கட்டில் பிரயாணம் செய்ய அனுமதிக்கக் கூடாது. எல்லோரும் பஸ்ஸின் உள்ளே வந்த பிறகே வண்டியை எடுக்க வேண்டும்.

மேற்கண்டவாறு கமிஷனர் ஷெனாய் நிருபர்களிடம் கூறினார்.

### கோவை சிந்தாமணி ஊழியர்களுக்கு

## ரூ. 350 குறைந்த பட்ச போனஸ்

கோவை, நவ. 5—ஆண், பெண் உட்பட 1500 பேர் பணியாற்றும் கோவை சிந்தாமணி சூப்பர் மார்க்கெட்டில் முதன்முறையாக குறைந்தபட்சம் ரூ. 350 போனஸ் அளிக்க நிர்வாகத்தினர் முன்வந்துள்ளனர்.

கோவை மாவட்ட பொறியியல் பொது தொழிலாளர் சங்க தலைவர்களுடன் நிர்வாகத்தினர் நடத்திய பேச்சுவார்த்தையின் முடிவாக இந்தபோனஸ் தரப்படுகிறது.

எ. ஐ. டி. யு. சியுடன் இணைக்கப்பட்ட மேற்படி தொழிற்சங்கம்தொழிலாளர்கட்கு ஊதிய உயர்வு, போனஸ், சிருடை, சைக்கிள் அலவன்ஸ் ஆகிய கோரிக்கைகளை முன்வைத்து வலியுறுத்தி போராடி வந்தனர்.

கடந்த பல ஆண்டுகளாக சிந்தாமணி தொழிலாளர்கள் குறைந்தபட்ச போனஸ் கோரியும் கிடைக்கவில்லை. சிந்தாமணிசரித்திரத்திலேயே முதன்முறையாக தமிழ்நாட்டிலே முதல் போனஸ் தரும் சிறப்புத் தகுதியையும் இந்த நிறுவனம் பெறுவது குறிப்பிடத்தக்கது.

மேற்படி பேச்சுவார்த்தைகளில் எ. பி. ராமசாமி, கே. சுப்பிரமணியம் ஆகியோர் தொழிலாளர்கள் சார்பில் கலந்துகொண்டனர்

## “இட்லி இளைக்கிறது: வடை வாடிவிட்டது”

சென்னை, நவ. 6—சென்னை அண்ணா சாலையில் பல ஓட்டல்களுக்கு எதிரே இன்று கவிஞர்கள் கவிதை பாடி போராட்டம் நடத்தினார்கள்.

இதற்கு ‘‘இட்லி இயக்கம்’’ என்று அவர்கள் பெயரிட்டுள்ளனர்.

கவிஞர் எம்.கே. சீனிவாசன் தலைமையில் கவிஞர்கள் கோவேந்தன், பொன்னடியான், மதுரை ராகவன் முதலிய 15 பேர், ஓட்டல் பலகாரங்களின் விலைகளைக் குறைக்குமப்படி வற்புறுத்தி கவிதைகளைப் பாடினார்கள்.

‘‘இட்லி இளைக்கிறது’’, ‘‘தோசை வாடிவிட்டது’’, ‘‘சட்னியில் புண்ணாக்கு’’ என்பன போன்ற கோஷங்களை அவர்கள் எழுப்பினார்கள்.

‘‘பண்டம் பெறுவோர் பாதுகாப்பு சங்கத்தின் பறக்கும் படையில் சேருங்கள்’’ என்று கோரி பொதுமக்களிடம் துண்டுப் பிரசுரங்களை அவர்கள் வினியோகித்தனர்.

# தாலியை பறித்த டார்ஜானுக்கு 7 ஆண்டு ஜெயில்

சென்னை, நவ. 6—கத்தியைக் காட்டி மிரட்டி பெண்ணின் தாலியை அறுத்துச் சென்ற இருவருக்கு கோர்ட்டில் 7-ஆண்டு சிறை தண்டனை விதிக்கப்பட்டது.

இது குறித்த விவரமாவது: ஓட்டேரியைச் சேர்ந்த தனலட்சுமி என்பவர் பழைய இரும்புப் பொருள் கடை வைத்து நடத்தி வருகிறார்.

கடந்த 13—7—74 அன்று ரவுடி டார்ஜான், முனுசாமி ஆகிய இருவரும் தனலட்சுமியிடம் கத்தியைக் காட்டி மிரட்டி கழுத்தில் இருந்த 7½ சவரன் தாலி சங்கிலியை பறித்துக்கொண்டு சென்றார்களாம்.

இதன் மதிப்பு ரூ. 2,700 என்று கூறப்படுகிறது.

இவர்கள் இருவரையும் கைது செய்து வழக்கு தொடர்ந்தனர்.

வழக்கை விசாரித்த அடிஷனல் செஷன்ஸ் ஜட்ஜ் இருவருக்கும் தலா 7 ஆண்டு கடுங்காவல் தண்டனை விதித்து தீர்ப்புக் கூறினர்.

கருணாநிதி தலைமையில் நடக்கிறது

# "இரட்டை மனிதன்" எஸ்.எஸ்.ஆர். நடிக்கும் புதுமை நாடகம்

சென்னை, நவ, 6—தி.மு.கழக எம்.பி.யான எஸ். எஸ். ராஜேந்திரன் நடிக்கும் 'இரட்டை மனிதன்' என்ற புதுமையான நாடகம் இன்று மாலை சென்னை கலைவாணர் அரங்கில் நடைபெறுகிறது.



இந்த நாடகம் முதல் அமைச்சர் கருணாநிதி தலைமையிலும், அமைச்சர்கள் நெடுஞ்செழியன், அன்பழகன் ஆகியோர் முன்னிலையிலும் நடக்கிறது.

இந்த நாடகத்தின் கதை வசனம், பாடல், டைரக்ஷன் ஆகிய நான்கு பொறுப்புகளையும் எஸ். எஸ். ஆர். ஏற்றுள்ளார்.

இந்த நாடகம் இதுவரை 6 முறை நடத்தப்பட்டிருக்கிறது. சென்னையில் இப்போது இரண்டாவது முறையாக கலைவாணர் அரங்கில் நடைபெறுகிறது.

இந்த நாடகம் பற்றி நமது நிருபரிடம் எஸ். எஸ். ராஜேந்திரன் எம். பி. கூறியதாவது:—

## "சொந்தக் குரலில் பாடுகிறேன்"

'இரட்டை மனிதன்' என்பது ஒரு அரசியல் நாடகம் என்று பலர் கருதுகிறார்கள். அது தவறு. இது முழுக்க முழுக்க சமூக நாடகம். பொய்யே சொல்லாத ஒருவன் தப்பித்தவறி ஒரு பொய்யைச் சொல்லி விடுகிறான். அதனால் ஏற்படும் சாதகபாதகங்களை இந்த நாடகத்தில் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. தவறியும் கூட பொய் சொல்லக் கூடாது என்ற போதனை வலியுறுத்தப்படுகிறது.

இதில் இரட்டை வேடத்தில் நானே நடிக்கிறேன்.

இந்த நாடகத்தில் அண்ணாவின் நடையில் பல வசனங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. அந்த வசனங்களில் தெரியும் அர்த்தம், பார்ப்பவர்களுக்கு அரசியல் பேசுவது போலத் தோன்றலாம். அதனால் பலர் கைதட்டுகிறார்கள். அதைவைத்து இதை அரசியல் நாடகம் என்று கூறுவது சரியில்லை.

பொதுவாக இதுவரை நான் தயாரித்து நடித்துள்ள பல நாடகங்களில் இது, முற்றிலும் மாறுபட்ட புதுமையான நாடகம் என்று நான் கருதுகிறேன்.

இதில் ஒரு தனியம்சம், சொந்தக் குரலில் நானே பாடுகிறேன். சீன்களும் புதுமையான முறையில் அமைக்கப்பட்டுள்ளன.

இந்த நாடகத்தைப் பார்ப்பவர்களின்கருத்தை அறிந்து, அதற்கேற்ப மாறுதல்களைச் செய்து இதை சினிமா படமாகத் தயாரிக்க உத்தேசித்துள்ளேன்.

மேற்கண்டவாறு நமது நிருபரிடம் எஸ். எஸ். ஆர். கூறினார்.

# காரைக்குடி தமிழிசை சங்கம்: மாரிமுத்து பிள்ளை தேர்வு



காரைக்குடி, நவ. 6—தங்கபஸ்பம் புகையிலை அதிபர் என். ஏ. மாரிமுத்து பிள்ளை, காரைக்குடி தமிழிசைச் சங்கத்துக்கு 5-வது முறையாக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

காரைக்குடி சேம்பர்-ஆப்-காமர்ஸ் அண்டு இண்டர்ஸ்ட்ரிக்கும் 4-வது முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டர்.

போலீசாரால் தேடப்பட்ட

# அ. தி. மு. க.வினர் கைது: கம்யூனிஸ்டு கட்சி பிரமுகரை தாக்கியவர்கள்

பட்டுக்கோட்டை, நவ. 6—கொடி ஏற்றப்போன வ. கம்யூனிஸ்ட் பிரமுகரை தடுத்து தாக்கியதாக அ.தி.மு.க. பிரமுகர்கள் உட்பட 9 பேர்களை போலீசார் கைது செய்தனர்.

இந்த பரபரப்பான சம்பவம் பற்றிக் கூறப்படுவதாவது:—

பட்டுக்கோட்டையை அடுத்த ஆவணம் கிராமத்தில் கடந்த 29-10-74-ந் தேதி வலது கம்யூனிஸ்டு கட்சிப் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

அதையொட்டி அன்று மாலை 6 மணிக்கு ஆவணம் பஸ் நிலையம் அருகே பேராவூரணி வட்டார வலது கம்யூனிஸ்டு செயலாளர் பி. ரெங்கசாமி, ரெத்தினம் உள்பட பலர் கூட்டமாகச் சென்று கொடி ஏற்றப் போனார்களாம்.

அப்போது அந்த ஊர் அ. தி. மு. க.வைச் சேர்ந்த முத்துக்குமரன், சிவலிங்கம் ஆகியோர் வந்து தடுத்து 'கொடி ஏற்றக் கூடாது' என்று கூறினார்களாம்.

அதற்கு ரெங்கசாமி, 'மற்ற கட்சி கொடிகள் பறக்கும் போது எங்கள் கட்சி கொடி ஏற்றக்கூடாதா என்று கேட்டாராம்.

உடனே அதிமுகவினர் 'அது ஊர் கட்டுப்பாடு' என்று கூறி கொடி ஏற்றப் போன ரெங்கசாமியை தாக்கிப் படுகாயப் படுத்தினார்களாம்.

இது பற்றி கீரமங்கலம் போலீசில் புகார் செய்யப்பட்டது. தகவல் அறிந்த பட்டுக்கோட்டை போலீஸ் இன்ஸ்பெக்டர் சின்னத்தம்பி, கீரமங்கலம் சப்-இன்ஸ்பெக்டர் வெள்ளைச்சாமி ஆகியோர் விரைந்துசென்று தீவிர புலன் விசாரணை நடத்தி தலைமறைவாக இருந்த அதிமுக. பிரமுகர் முத்துக்குமரன், சிவலிங்கம், ஆவணம் பஞ்சாயத்து உறுப்பினர் பாலசுப்பிரமணியம், கருப்பையன், சுந்தரதேவர், வீரப்பன், மாணிக்கம், ஆ. வீரப்பன், கருப்பையன் ஆகிய 9 பேர்களை கைது செய்தனர்.

சேலம் நகராட்சி மின்துறை ஊழல்:

## தணிக்கை செய்ய வேண்டுகோள்

சேலம், நவ. 6—சேலம் நகர் மன்றக் கூட்டத்தில் மின்துறை பிரிவு பற்றி ஊழல் குற்றச்சாட்டுகள் கூறப்பட்டதல்லவா?

தயாளன், வேலாயுதம் என்ற இரு நகராட்சி மின்துறை ஊழியர்கள் நகராட்சி பணிகளுக்காக மேட்டூருக்கு மாற்றப்பட்டனர். இவர்கள் மீது நடவடிக்கை எடுக்காதது அனைவருக்கும் ஆச்சரியமாக உள்ளது.

நகராட்சி மின்துறை பிரிவு குற்றச்சாட்டுகள் சம்மந்தமாக ஆராய்ந்து குடோனில் உள்ள மின் சாதனங்களை தணிக்கை செய்ய வேண்டுமென சென்னையில் உள்ள ஆடிட் அலுவலகத்துக்கு வேண்டுகோள் அனுப்பப்பட்டுள்ளது என்று கூறப்படுகிறது.

## நியூயார்க் பருத்தி மார்க்கெட்

நியூயார்க், நவ. 5 –

| | |
|---|---|
| ஆரம்ப விலை | 43·90 |
| முடிவு விலை | 44·60 |

# முன்னாள் போர் வீரருக்கு உதவி அளிக்க வாரியம்: மத்திய மந்திரி தகவல்

சென்னை, நவ. 6—முன்னாள் ராணுவத்தினருக்கு உதவி அளிப்பதற்காக தனி அமைப்பு ஒன்றை மத்திய அரசு விரைவில் அமைக்கும்.

மத்திய ராணுவ இலாகா உதவி மந்திரி ஜே. பி. பட்நாயக் இந்த தகவலை நேற்று சென்னையில் நிருபர்களிடம் வெளியிட்டார்.

சிறு தொழில்கள், போக்குவரத்து, விவசாயம் ஆகிய துறைகளில் புதுதொழில் ஆரம்பிப்பதற்கு இந்த நிறுவனம் உதவி அளிக்கும்.

இதற்காக 3 கோடி ரூபாய் மூலதனத்துடன் இந்த நிறுவனம் நிறுவப்படும். இந்த உதவித் திட்டத்தினால் முதலாவது கட்டத்தில் சுமார் 1,000 முன்னாள் ராணுவத்தினர் பயன் அடைவார்கள்.

## தமிழ்நாடு மந்திரியுடன் ஆலோசனை

தமிழ்நாடு மந்திரி என். வி. நடராசனை நேற்று மத்திய உதவி மந்திரி பட்நாயக் சந்தித்து முக்கிய ஆலோசனை நடத்தினார்.

முப்படைகளை விட்டு சீக்கிரமே விலகுவோருக்கு மறுவாழ்வு அளிக்கும் பொறுப்பை மத்திய அரசு ஏற்றுக் கொண்டுள்ளதாக நிருபர்களிடம் பட்நாயக் தெரிவித்தார்.

மாநில அரசுத்துறை நிறுவனங்களில் மூன்றாவது வகுப்பு பதவிகளில் 17½ சதவிகிதத்தையும், நான்காவது வகுப்பு பதவிகளில் 27½ சதவிகிதத்தையும் முன்னாள் ராணுவத்தினருக்கு ஒதுக்க தமிழ்நாடு அரசு முன்வர வேண்டும் என்று தாம்விடுத்த வேண்டுகோளை பரிசீலிக்க தமிழ்நாடு அரசு சம்மதித்துள்ளதாக பட்நாயக் சொன்னார்.

வடஆற்காடு, ராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களில் சுமார் 2 லட்சம் முன்னாள் ராணுவத்தினர் இருப்பதாக அவர் கூறினார்.

முன்னாள் ராணுவத்தினருக்கு வேலை வாய்ப்பு டைரக்டர் அலுவலகத்தில் தனி பிரிவு ஒன்று அமைக்க தமிழ்நாடு அரசு சம்மதித்துள்ளது.

வீட்டுவசதி—நகர அபிவிருத்தி கார்ப்பரேஷனின் ஆதரவில் முன்னாள் ராணுவத்தினருக்கு வீடுகளைக் கட்டிக் கொடுப்பதற்காக தஞ்சாவூர், வட ஆற்காடு, நீலகிரி மாவட்டங்களில் 40 ஏக்கர் நிலங்களை தமிழ்நாடு அரசு ஒதுக்கியுள்ளது.

முன்னாள் ராணுவத்தினருக்கு உதவி அளிப்பதற்காக, லாரி போக்குவரத்து கார்ப்பரேஷன் ஒன்றை அமைப்பதற்கான திட்டம் தயாரிக்கப்பட்டுள்ளது. இந்தக் கார்ப்பரேஷன் முதலில் 100 லாரிகளை வாங்கும்.

# இந்திரா ரஷியா போகிறார்

மாஸ்கோ, நவ. 6—இந்தியப் பிரதமர் இந்திரா காந்தி அடுத்த மாதம் மாஸ்கோ நகருக்கு விஜயம் செய்வார் என்று தெரிகிறது.

அப்போது ரஷியத் தலைவர்களை அவர் சந்தித்து முக்கிய பேச்சு வார்த்தை நடத்துவார்.

கடந்த செப்டம்பர் மாதத்தில் மாஸ்கோ நகரில் ரஷிய கம்யூனிஸ்டு தலைவர் பிரெஷ்னெவை இந்தியாவின் அப்போதைய வெளிநாட்டு மந்திரி சுவரண் சிங் சந்தித்தார். மாஸ்கோவுக்கு வருமாறு இந்தியப் பிரதமரை அழைக்கும் கடிதம் ஒன்றை அப்போது சுவரண் சிங்கிடம் பிரெஷ்னெவ் கொடுத்தார்.

# சென்னை மார்க்கெட்

சென்னை, நவம். 6—

### தங்கம்

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 523 00
(22 காரட்) சில்லரை கிராம் ரூ. 49 75

### வெள்ளி

பார் வெள்ளி (1 கி. கி.) ரூ. 1210 00
உள்ளூர் 1075 00
(வெள்ளி 10 கிராம்) ரூ. 12 20

### மணிலாப்பயறு

மாரிகால பட்டாணி மொத்த விலை ரூ. 270 00

### மணிலா எண்ணெய்

மொத்த விலை ரூ. 720 00
சில்லரை விலை ரூ. 7 40

### விளக்கெண்ணெய்

(100 கி. கி.) சென்னை டெங்குடெலிவரிதிருப்பத்தூர் மொத்த விலை ரூ. 570 00
சேலம் தாமரை அன்னம் மார்க் (16 05 கி. கி.) ரூ. 87 00

### தேங்காய் எண்ணெய்

(16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் ரூ. 188 00
ரூ. 199 00

### நல்லெண்ணெய்

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 142 50
விற்பனை வரி தனி
சில்லரை கிலோ 1-க்கு ரூ. 9 00

### கடலைப்பிண்ணாக்கு

கி.கி. கொண்ட மூட்டைக்கு
70 எக்ஸ்பெல்லர் ரூ. 84 00

### சர்க்கரை

பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. ரூ. 463 00
முதல் ரூ. 465 00

# கோர்ட் விடுவித்த "கடத்தல் மன்னர்கள்" மீண்டும் கைது

பெங்களூர், நவ. 6—கர்நாடகமாநில ஹைகோர்ட் உத்தரவுப்படி நேற்றிரவு விடுதலை செய்யப்பட்ட 6 "கடத்தல் மன்னர்களும்" இன்று காலையில் மீண்டும் கைது செய்யப்பட்டனர்.

அவர்கள் முன் போலவே உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்யப்பட்டனர்.

இத் தகவலை பெங்களூர் துணை போலீஸ் கமிஷனர் சந்திரசேகர் இன்று காலையில் தெரிவித்தார்.

சீனிவாச செட்டி உட்பட இந்த 6 கடத்தல் மன்னர்களும் முன்னர் உள்நாட்டு பாதுகாப்பு சட்டப்படிதான் கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டிருந்தனர்.

ஆனால் அவர்கள் ஹைகோர்ட்டில் வழக்குப் போட்டனர்.

சீனிவாசசெட்டி, மனுபாய் தேவிசந்த், சம்பாலால், மோகன்லால். கிஷன்லால் ஜெயின் என்ற அந்த 6 பேர்களுடைய மனுக்களையும் நீதிபதிகள் விசாரித்து, எல்லோரையும் உடனடியாக விடுதலை செய்யும்படி நேற்று உத்தரவிட்டார்கள்.

இவர்களை கைது செய்து காவலில் வைத்திருப்பதற்கு கூறப்பட்டுள்ள காரணங்கள் பொருத்தமாக இல்லை என்று நீதிபதிகள் தீர்ப்பில் கூறினர்.

ஆனால் 6 கடத்தல் மன்னர்களும் இன்று காலையில் மீண்டும் கைது செய்யப்பட்டனர்.

கண்டன கூட்டம்:

## குசேலர் அறிக்கை

சென்னை, நவ. 6—டபுள்யூ. எஸ். இன்சுலேடர் தொழிலாளர்கள் நேற்று தாக்கப்பட்டதற்கு குசேலர் கண்டனம்தெரிவித்துள்ளார்.

நாளை கோட்டைக்கு தொழிலாளர் ஊர்வலம் செல்ல இருப்பதாக குசேலர் ஒரு அறிக்கையில் அறிவித்துள்ளார்.

சென்னை போரூர் டபிள்யூ எஸ். இன்சுலேட்டர் தொழிலாளர்கள் 5—11—74 அன்று போராட்டம் நிதி திரட்டிக் கொண்டு இருந்த இடத்தில் நிர்வாகத்தின் ஆட்களால் தொழிலாளர்கள் தாக்கப்பட்டனர்.

தவிர நிர்வாகத்தின் தூண்டுதலினால் போலீசார் தாக்கியவர்களை விட்டுவிட்டு தாக்கப்பட்ட தோழர்களை கைது செய்து இருக்கிறார்கள்.

நிர்வாகத்தின் ஆணவத்தைக் கண்டித்தும் போலீசாரின் அடக்குமுறையைக் கண்டித்தும் இன்று காலை (6-ம் தேதி) முன்னாள் மேயர் கிருஷ்ணமூர்த்தி தலைமையில் ஹட்கோ, டபிள்யூ. எஸ். சர்ஜிகல், இந்தியா சிமெண்ட்ஸ், ஐவலம், புஷ்போக்கலஸ், ஆகிய தொழிற்சாலை தொழிலாளர்கள் 700க்கு மேற்பட்டவர்கள் ஊர்வலமாகச் சென்று இன்சுலேடர் வாசலில் பொதுக்கூட்டம் நடத்தினர்கள்.

கூட்டத்திற்கு சி ஐ. டி. யூ. பொதுச்செயலாளர் சவுந்திர ராஜன் நிர்வாகத்தின் போக்கையும் போலீஸ் அடக்குமுறையையும் கண்டித்துப் பேசினார்.

நாளை (7-ம் தேதி காலை 8 மணிக்கு இன்சுலேட்டர் தொழிற்சாலை வாயிலில் இருந்து ஆர்ப்பாட்ட ஊர்வலம் கோட்டைக்கு அமைச்சர்களைக் காண செல்ல இருக்கிறார்கள்.

இந்த ஊர்வலத்தில் அனைத்து தொழிலாளர்களும் கலந்து கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன் என்று குசேலர் அறிக்கையில் கூறி இருக்கிறார்.

# ராமையா விவகாரம்: இந்திராவுடன் பருவா ஆலோசனை

புதுடெல்லி, நவ. 6—காங்கிரஸ் கட்சித் தலைவர் பருவா நேற்று டெல்லியில் பிரதமர் இந்திரா காந்தியைச் சந்தித்துப் பேசினார்.

இருவரும் சுமார் 90 நிமிட நேரம் முக்கிய ஆலோசனை நடத்தினார்கள்.

சமீபத்தில் சென்னையில் தமிழ்நாடு புதுகாங்கிரஸ் கட்சித் தலைவர்களுடன் ராமையா விவகாரம் பற்றி தாம் நடத்திய பேச்சு வார்த்தையின் விவரத்தை இந்திராவிடம் பருவா வெளியிட்டார்.

மராட்டிய மந்திரி சபை விஸ்தரிப்பு சம்பந்தமாக பம்பாயில் மராட்டிய காங்கிரஸ் தலைவர்களுடன் தாம் நடத்திய பேச்சுவார்த்தை பற்றியும் அப்போது பருவா எடுத்துக் கூறினார்.

பீகார், நிலைமை குறித்து இரு தலைவர்களும் முக்கிய விவாதம் நடத்தினார்கள்.

பம்பாய், சென்னை நகரங்களில் காங்கிரஸ் தலைவர்களுடன் முக்கிய ஆலோசனை நடத்திவிட்டு, பருவா டெல்லிக்குத் திரும்பிய பின்னர் அவர், இந்திராவைச் சந்தித்தது இது இரண்டாவது தடவையாகும்.

நல்ல சாப்பாடு போடாதது ஏன்?

# சென்னை கல்லூரி மாணவர்கள் திடீர் ஸ்டிரைக், ஊர்வலம்

சென்னை, நவ. 6—சென்னை மயிலாப்பூர் விவேகானந்தா கல்லூரி மாணவர்கள் இன்று திடீரென்று ஸ்டிரைக் செய்தனர். ஒரு ஊர்வலத்தையும் நடத்தினார்கள்.

கல்லூரியின் மாணவர் விடுதியில் சுமார் 300 மாணவர்கள் தங்கியுள்ளனர். அவர்களுக்கு நல்ல சாப்பாடு போடப்பட வேண்டும் என்பது அவர்களுடைய முக்கிய கோரிக்கை. இந்தக் கோரிக்கையை வற்புறுத்தி நேற்று விடுதி மாணவர்கள் உண்ணாவிரதப் போராட்டம் நடத்தினார்கள்.

அந்தக் கோரிக்கைக்கு அனுதாபம் தெரிவிக்கும் வகையில் விவேகானந்தா கல்லூரி மாணவர்கள் இன்று ஸ்டிரைக் செய்தனர்.

அந்தக் கல்லூரி மாணவர் விடுதியில் தங்கியுள்ள மாணவர்களுக்கான ஒழுங்குமுறை விதிகள் தளர்த்தப்படவேண்டும் என்பது மற்றொரு முக்கிய கோரிக்கை. மாணவர் அறைகளில் ரேடியோ பெட்டிகளை வைத்திருக்க அனுமதி அளிக்கப்பட வேண்டும். அறைகளில் மின்சார விசிறிகள் பொருத்தப்பட வேண்டும் என்பவை இதர கோரிக்கைகளாகும்.

கல்லூரி நிர்வாகத்தினரை 2 தினங்களுக்கு முன்பு மாணவர் பிரதிநிதிகள் சந்தித்து விடுதியில் நல்ல சாப்பாடு போடப்பட வேண்டும் என்று கோரியதாகவும், இந்தக் கோரிக்கையை கவனிப்பதாக அவர்களுக்கு வாக்குறுதி அளிக்கப்பட்டதாகவும் நிர்வாகத்தின் சார்பில் கூறப்பட்டது. மாணவர்களின் போராட்டம் பற்றி நிர்வாகத்தினருக்கு முன்னதாக எதுவும் அறிவிக்கப்படவில்லை என்றும் கூறப்பட்டது.

முன்னாள் அதிகாரி

## செல்வம் காலமானார்

கோவை, நவ. 6—கோவை சி. எம். செல்வம் இந்த முதல் தேதியன்று கோவையில் உள்ள தமது வீட்டில் காலமானார். அவருக்கு வயது 62.

இவர் தமிழ்நாட்டில் பலநகரங்களிலும் ஊராட்சி நிர்வாக அதிகாரியாக பதவி வகித்து ஓய்வுபெற்றவர்.

ஊராட்சிகளில் நிலுவை இல்லாமல் வரி வசூல் செய்தவர் என்ற நற்பெயர் பெற்றவர் செல்வம்.

இவருக்கு 4 மகன்களும், 2 மகள்களும் உள்ளனர்.

## 'நாரதர்' சீனிவாசராவ் மரணம்

சென்னை, நவ. 6— பிரபல எழுத்தாளரும், 'நாரதர்' சினிமா பத்திரிகையின் ஆசிரியருமான சீனிவாசராவ் நேற்று மரணமடைந்தார். அவருக்கு வயது 67.

நேற்று முன்தினம் சீனிவாசராவுக்கு உடல் நலக்குறைவு ஏற்பட்டது. உடனே ராயபேட்டை மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார்.

அங்கு அவருக்குச் சிகிச்சை அளிக்கப்பட்டும் பயனளிக்காததால் நேற்று மாலை 5 மணிக்கு மரணமடைந்தார்.

கடந்த 40 ஆண்டுகளுக்கு மேலாக பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டு வந்த சீனிவாசராவ் போட்டோ எடுப்பதிலும் நிபுணர்.

இவரது இறுதிச் சடங்கு இன்று மாலை நடைபெறுகிறது.

# 1,100 ஆண்டுகளுக்கு முந்திய காளி சிலை: தஞ்சையில் கிடைத்தது

தஞ்சாவூர், நவ. 6—சுமார் 1,100 ஆண்டுகளுக்கு முந்திய காளி சிலை ஒன்று திருவையாறுக்கு அருகே பணையூர் கிராமத்தில் ஒரு கோயிலில் கண்டுபிடிக்கப்பட்டது. அந்தக் கோயிலில் இந்த சிலையை மூல விக்கிரகமாக வழிபட்டு வருகிறார்கள்.

இந்தக் காளி சிலைக்கும் மற்ற காளி சிலைக்கும் வித்தியாசம்இருப்பதாக தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத் துறை அதிகாரி என். காசிநாதன் கூறினார்.

இந்தக் காளி சிலையின் வலது கையில்திரிசூலம், பாசம், கத்தி ஆகியவைகளும், இடதுகையில் கபாலம், கேடையம, மணி, உடுக்கை ஆகியவைகளும் இடம் பெற்றுள்ளன. இவற்றுடன் இந்தக் காளிசிலை, பயங்கரமாக காட்சி அளிக்கிறது.

# இந்திரா - ஜே. பி. பேச்சுவார்த்தை மீண்டும் நடக்கலாம்

புதுடெல்லி, நவ. 6—பிரதமர் இந்திரா - ஜெயப்பிரகாஷ் இடையே மீண்டும் பேச்சுவார்த்தை நடைபெறலாம் என்று டெல்லியில் அரசியல் வட்டாரங்களில் கருத்து தெரிவிக்கப்பட்டுள்ளது.

சில நாட்களுக்கு முன்னர் இந்திரா - ஜெயப்பிரகாஷ் இடையே நடந்த பேச்சுகள் தோல்வியடைந்தது நினைவிருக்கலாம்.

இப்பேச்சு தோல்வி அடைந்தாலும் இரு தலைவர்களும் மீண்டும் சந்தித்துப் பேசியாக வேண்டும் என்று சந்திரசேகர் கிருஷ்ணகாந்த் உட்பட பல இந்திரா காங்கிரஸ் எம்.பி.க்கள் கருதுகின்றனர். இருவர் இடையேயும் நிரந்தரமாகப் பிளவு இருந்தால் அதனால் விரும்பத்தகாத தீவிரப் போக்கு கொண்டவர்கள் தான் பலன் அடைவர் என்று அவர்கள் கருதுகின்றனர்.

பீகாரில் நடக்கும் போராட்டம் சற்று ஓய்ந்தால் இரு தலைவர்களுக்கும் இடையே மீண்டும் பேச்சு நடைபெறலாம் என்று கூறப்படுகிறது.

## இந்திரா போட்ட நிபந்தனை

சில நாட்களுக்கு முன்னர் நடந்த பேச்சின்போது பிரதமர் இந்திரா, பீகார் சட்ட சபையைக் கலைப்பதற்குக்கூட தயாராக இருந்ததாகவும் ஆனல் இந்திரா போட்ட ஒரே ஒரு நிபந்தனையை ஏற்க ஜே. பி. (ஜெயப்பிரகாஷ்) மறுத்ததால்தான் பேச்சு முறிந்ததாகவும் இப்போது தகவல் கிடைத்துள்ளது.

ஜெயப்பிரகாஷ் இனி வேறு மாநிலங்களில் போராட்டத்தை நடத்தக்கூடாது. என்பது இந்திரா போட்ட நிபந்தனையாகும் என்று கூறப்படுகிறது.

"வேறு மாநிலங்களிலும் சட்ட சபையைக் கலைக்க வேண்டும் என்று கோரிக்கை எழுந்தால் அதை ஆதரிக்க மாட்டோம். ஆனல் மக்களின் குறைகளைப் போக்க கோரி நாட்டில் போராட்டங்களைத் தொடர்ந்து நடத்துவோம்" என்றும் பிரதமரிடம் ஜெயப்பிரகாஷ் கூறிப் பார்த்தார்.

ஆனலும் வேறு மாநிலங்களிலும் ஜெயப்பிரகாஷ் தனது போராட்டங்களைக் கைவிட வேண்டும் என்று இந்திரா தனது நிபந்தனையை வற்புறுத்தியதால் தான் பேச்சு தோற்றதாகத் தெரிகிறது.

ஜெயப்பிரகாஷ் இந்த நிபந்தனையை ஏற்பதாக இருந்தால் பீகார் அரசை கலைத்து சட்ட சபையை "சஸ்பெண்ட்" செய்ய பிரதமர் இந்திரா தயாராக இருந்ததாகக் கூறப்படுகிறது.

பீகார் சட்டசபையை அடியோடு கலைக்கவேண்டும் என்பது ஜே. பி.யின் கோரிக்கையாகும். ஆனல் அதற்கு தற்காலிகமாக 'சஸ்பெண்ட்' செய்து ஜனதிபதி ஆட்சியை அமுல்படுத்த இந்திரா தயாராக இருந்ததாகக் கூறப்படுகிறது.

## 8 அம்சங்களில் உடன்பாடு

பீகார் அரசு ராஜிநாமா செய்யவேண்டும்; சட்ட சபையை 'சஸ்பெண்ட்' செய்யவேண்டும்; ஜனதிபதி ஆட்சியை அமுல் படுத்த வேண்டும்; அடுத்த தேர்தல் வரை சட்டசபை 'சஸ்பெண்ட்' செய்யப்பட்டிருக்க வேண்டும்; ஜே. பி. யை கவர்னர் சந்தித்து அரசுடன் ஒத்துழைக்கும்படி கோர வேண்டும்; அரசியல் கைதிகளை உடனடியாக விடுதலை செய்ய வேண்டும்; ஊழல் ஒழிக்க ஆலோசனை கூறும்படி ஜே.பி. கேட்டுக் கொள்ளப்பட வேண்டும்; கல்விச் சீர்திருத்தம் பற்றி ஆராய ஜே. பி. தலைமையில் ஒரு கமிட்டி அமைக்கப்பட வேண்டும்.

இந்த 8 அம்சங்கள் குறித்து பொதுப்படையாக ஓர் உடன்பாடு ஏற்பட்டதாகத் தெரிகிறது.

இவ்வித நிலைமையில் இந்திரா—ஜெயப்பிரகாஷ் இடையே மீண்டும் சந்திப்பு ஏற்பட்டால் உடன்பாட்டுக்கு வழி பிறக்கலாம் என்று நம்பப்படுகிறது.

---

தமிழக பஸ் அதிபர்களின்

# வழக்கு தள்ளுபடி: சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு

புதுடெல்லி, நவ. 6—தமிழ் நாட்டுபஸ் அதிபர்கள் டெல்லி சுப்ரீம் கோர்ட்டில் தொடர்ந்த வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது.

தமிழ்நாட்டில் ஓடும் தனியார் பஸ்களை அரசு உடைமை ஆக்குவதற்கான அவசர சட்டம் 1973-ம் ஆண்டு ஜனவரி மாதம் 14-ந் தேதி பிறப்பிக்கப்பட்டது. இதை தொடர்ந்து சட்ட சபையில் சட்டமும் நிறைவேற்றப்பட்டது.

இதை எதிர்த்து பஸ் அதிபர்கள் சென்னை ஐகோர்ட்டில் வழக்கு தொடர்ந்தார்கள் அரசுடமை சட்டம் செல்லாது என்று சென்னை ஐகோர்ட்டில் தீர்ப்பு கூறப்பட்டது. இதை எதிர்த்து டெல்லி சுப்ரீம் கோர்ட்டில் அரசாங்கம் அப்பீல் செய்துள்ளது.

இந்த வழக்கு டெல்லி சுப்ரீம்கோர்ட்டில் நடந்து வருகிறது. இதற்கிடையில் தற்காலிகமாக பஸ்களை ஓட்ட இடைக்கால பெர்மிட் வழங்க வேண்டும் என்று பஸ் அதிபர்கள் சுப்ரீம்கோர்ட்டில் "ரிட்" மனு தாக்கல் செய்தார்கள். மொத்தம் 55 "ரிட்" மனுக்கள் இதுபோல் தாக்கல்செய்யப்பட்டன.

இந்த மனுக்களை விசாரித்த சுப்ரீம் கோர்ட்டு நீதிபதி கோர்ட்டு செலவுடன் எல்லா மனுக்களையும் தள்ளுபடி செய்தார்.

---

முஸ்லிம் லீக் அறிவிப்பு

# நகரசபை தேர்தல்: தி. மு. க. உடன் உள்ள உறவு நீடிக்கும்

சென்னை, நவ. 6—வருகிற நகர சபைத் தேர்தலில் தி மு கழகத்துடன் தொகுதி உடன்பாடு செய்து கொள்ள முஸ்லீம் லீக் முடிவு எடுத்துள்ளது.

கடந்த தேர்தல்களில் தி மு கழக கூட்டணியில் முஸ்லிம் லீக் இருந்தது தெரிந்ததே. இந்தக் கூட்டு நீடிக்கும் என்று இப்போது முஸ்லிம் லீக் அறிவித்துள்ளது.

முஸ்லிம் லீக்கின் செயற்குழுக் கூட்டம் இந்த முடிவை அறிவித்துள்ளது.

முஸ்லிம் லீகின் செயற்குழுக் கூட்டம் கடந்த 3-ம் தேதி நடந்தது.

அதில் வர இருக்கும் நகர சபைத் தேர்தல், மதுரை மாநகராட்சி தேர்தல் பற்றி ஆராயப்பட்டது.

செயற்குழு நிறைவேற்றிய தீர்மான விவரம்.—

தி.மு.கழகம், மற்றும்தோழமைகட்சிகளுடன் இதற்குமுன் இருந்துவரும் தொகுதி உடன்பாட்டைப் போன்று இப்போது வர இருக்கும் நகராட்சித் தேர்தலிலும் தொகுதி உடன்பாடு செய்து கொள்வது.

முஸ்லிம் சமுதாயத்தில் நியாயமான பிரதிநிதித்துவம் காப்பாற்றப்படும் வகையில் தோழமைக் கட்சிகளுடன் பேச்சுவார்த்தை நடத்துவது.

முஸ்லிம் லீக் சார்பில் வேட்பாளர்களை தேர்ந்து எடுக்க மாவட்ட முஸ்லிம் லீகிற்கு அதிகாரம் அளிப்பது.

தகராறு வரும் இடங்களில் மட்டும் வேட்பாளர்களை முஸ்லிம் லீக் ஆட்சி மன்றக் குழு தேர்ந்து எடுக்கும் என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## கடத்தல் செய்தி: முஸ்லிம் லீக் கண்டனம்

சென்னை நவ, 6—கடத்தல் மன்னர்களைப் பற்றி செய்தி போடும் சாக்கில் முஸ்லிம்கள் அதிகமாக வாழும் ஊர்களை இழிவுபடுத்தும் பத்திரிகைகள் மீது அரசாங்கம் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று தமிழக அரசை முஸ்லிம் லீக் கோரியுள்ளது.

கடந்த 3-ம் தேதி நடந்த முஸ்லிம் லீக் செயற் குழுக் கூட்டத்தில் இது பற்றிய தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

செயற்குழுக் கூட்டத்திற்கு அப்துல் வகாப் தலைமை வகித்தார்.

பத்திரிகைகள்மீது நடவடிக்கை எடுக்கக் கோரும் தீர்மான விவரம்:—

கள்ளக்கடத்தல், அன்னிய செலாவணி மோசடி, பதுக்கல், வரி ஏய்ப்பு, போன்ற சமூக விரோத செயல்களில் ஈடுபடுகின்ற தீயசக்திகள் மீது அவசரச் சட்டத்தின் கீழ் அரசு எடுக்கும் நடவடிக்கையை செயற்குழு வரவேற்கிறது.

அதே நேரத்தில் அந்த நடவடிக்கைகள் பற்றி செய்தி வெளியிடுவதன் பெயரால் வகுப்பு வாத கண்ணோட்டத்துடன் சில பத்திரிகைகள் செய்திகளை திரித்தும், புரட்டியும் கண்டு செயற்குழு வருந்துகிறது.

கடத்தல்பற்றி பரபரப்பான செய்தி என்ற பெயரில் குறிப்பிட்ட சமுதாயத்தையும் தாய் குலத்தையும், முஸ்லீம்கள் பெரும்பான்மையாகவசிக்கும் ஊர்களைப் பற்றியும் இழிவு படுத்தும் வகையில் அந்த ஏடுகள் செய்திகள், படங்கள், கார்ட்டூன், கட்டுரைகள் வெளியிட்டுவருகின்றன.

அந்த சில ஏடுகளில் இத்தகைய வகுப்புவாதப் போக்கை செயற்குழு வன்மையாகக் கண்டிக்கிறது.

அத்தகைய ஏடுகள் மீது சட்டபூர்வமான நடவடிக்கைகளை அரசு எடுக்க வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

---

# இன்றைய சினிமா

**சென்னை**

| | |
|---|---|
| ராம் | வீர பாண்டிய சட்டபொம்மன் |
| நியூ எல்பின்ஸ்டன் | மோகம் |
| நேஷனல் | தெய்வமகன் |
| சராஸ் | வீட்டுக்கு ஒரு பிள்ளை |

**தாம்பரம்**

| | |
|---|---|
| நேஷனல் | சட்டைக்காரி (மலையாளம்) |
| எம். ஆர். தியேட்டர் | வாணி ராணி |
| ஸ்ரீசித்ரா | சம்பூர்ணராமாயணம் |

**வில்லிவாக்கம்**

| | |
|---|---|
| ராயல் | ராஜநாகம் |

**குரோம்பேட்டை**

வெற்றி அவளுக்குநிகர் அவளே

---

## மகாவீரர் நினைவாக தபால்தலை

புதுடெல்லி, நவ. 6—ஜைனமதத்தை நிறுவியவரான மகாவீரரின் 25-வது நூற்றாண்டு நினைவு விழாவையொட்டி வருகிற 13-ந் தேதி விசேஷ தபால்தலை ஒன்று வெளியிடப்படும்.

---

டெல்லியில் நடந்தது

# மேயர் அறையில் கவுன்சிலர்கள் அடிதடி சண்டை

புதுடெல்லி, நவ. 6—டெல்லியில் கடந்த திங்களன்று நடந்த 'பந்த்' எதிரொலியாக நேற்று டெல்லி மேயர் அறையின் வாசலில் இந்திரா காங்கிரஸ்-ஜனசங்க கவுன்சிலர்கள் இடையே அடிதடி சண்டை நடந்தது.

இந்திரா காங்கிரஸ் கவுன்சிலர்கள் மேயர் அறைக்குள் நுழைய முயற்சித்தனர். அவர்களை உள்ளே நுழையவிடாதபடி மேயர் அறைகளில் ஜனசங்க கவுன்சிலர்கள் கைகோர்த்து நின்றனர். இந்திரா காங்கிரஸ் கவுன்சிலர் எப்படியாவது உள்ளே நுழைய மோதினர். ஜனசங்க கவுன்சிலர்களோ அவர்களை நெட்டித்தள்ளினர்.

இதை தொடர்ந்து இரு கட்சி கவுன்சிலர்களும் அடிதடியில் இறங்கினர். சிறிது நேரம் இரு தரப்பினர் இடையேயும் சண்டை நடந்தது.

ஜனசங்க கவுன்சிலர்களை தூரத் தள்ளிவிட்டு இந்திரா காங்கிரஸ் கவுன்சிலர் ஒருவர் மேயர் அறைக்குள் நுழைந்தார்.

உள்ளே நுழைந்த அவர் மேயரைப் பார்ப்பதற்காக உள்ளே உட்கார்ந்திருந்த ஒருவரை சட்டையைப் பிடித்து இழுத்து அப்பால் தள்ள முயன்றதாக ஜனசங்க கட்சியைச் சேர்ந்த மேயர் கே. என். சாஹ்னி குற்றம் சாட்டினர்.

கடைசியில் ஒருவழியாக அமைதி நிலவியது.

ஜனசங்க கவுன்சிலர் ஒருவர் பிரதமர் இந்திராவைத் தாக்கி தகாத வார்த்தையைப் பயன்படுத்தியதாக இந்திரா காங்கிரஸ் கவுன்சிலர்கள் கூறினர். இதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கவே இந்திரா காங்கிரஸ் கவுன்சிலர்கள் மேயர் அறைக்குள் நுழைய முயற்சித்தனர்.

டெல்லி மாநகராட்சியில் ஜனசங்கம் ஆளுங்கட்சியாக உள்ளது. மேயர் ஜனசங்க கட்சியைச் சேர்ந்தவர். இந்திரா காங்கிரஸ் எதிர்க் கட்சியாக இருக்கிறது.

---

## வேலப்பன் விலகல்: தி. மு. க. கொடி ஏற்றப்பட்டது

சேலம், நவ. 6—சேலம் மாவட்ட அ. தி. மு. க. அமைப்பாளர் சி. வி. வேலப்பன் எம். எல், ஏ. ராஜினாமா செய்தார் என்ற தகவல் வந்த சிறிது நேரத்தில் மாவட்ட அ. தி. மு. க. காரியாலய செயலாளரும், வேலப்பனின் அந்தரங்க செயலாளருமான பழனிசாமி என்பவர் அ. தி. மு. க. காரியாலயத்தில் பறந்த அ. தி. மு. க. கொடியை இறக்கி தி. மு. க. கொடியை ஏற்றினர்.

---

# சொக்கலிங்கம் 7-ந் தேதி சென்னை திரும்புகிறர்



சென்னை, நவ 6—தமிழ் நாடு பாடபுத்தக நிறுவனத்தின் நிர்வாக இயக்குநர் சொக்கலிங்கம், ஜப்பானிய விஜயத்தை முடித்துவிட்டு விமானமூலம் நாளை 7-ந்தேதி மாலை சென்னைக்கு திரும்பி வந்து சேருவார்.

## சொக்கலிங்கம் புத்தகத்திற்கு மத்திய அரசு பரிசு

மத்திய அரசாங்க கல்வி இலாகா, புதிதாக எழுதப் படிக்கக் கற்பவர்களுக்காக எழுதப்பட்ட 28 புத்தகங்களுக்கு ஒவ்வொன்றுக்கும் ரூ. 1,000 பரிசளித்துள்ளது.

தமிழில் சொக்கலிங்கம் எழுதியுள்ள 'தற்குறி நாகன்' என்ற புத்தகத்துக்கும், ஸ்வாமி விஜயலட்சுமி எழுதியுள்ள 'தொத்தும் சத்துரு' என்ற புத்தகத்துக்கும் பரிசளிக்கப்பட்டுள்ளது.

ஆண்டுதோறும் புதிதாக எழுதப் படிக்கக் கற்பவர்களுக்காக 14 பிராந்திய மொழிகளில் (சமஸ்கிருதம் தவிர) எழுதப்படும் புத்தகங்களுக்கு மத்திய கல்வி இலாகா பரிசளிக்கிறது. தவிர, பரிசு பெற்ற புத்தகங்களின் 1500 பிரதிகளை இலவச வினியோகத்துக்காக மத்திய அரசு கல்வி இலாகா வாங்குகிறது.

---

துண்டித்த கையை அனுப்பியவரின்

மிரட்டல் கடித விவரம்:

# "மகளைக் கடத்துவேன் அல்லது குடும்பத்தையே கொலை செய்வேன்"

சென்னை, நவ 6—சென்னையைச் சேர்ந்த ஒருவருக்கு துண்டிக்கப்பட்ட மனிதனின் கையுடன் ஒரு பார்சல் வந்தது அல்லவா?

அது யாருக்கு அனுப்பப்பட்டது என்ற விவரம் இப்போது தெரியவந்துள்ளது.

அந்தப்பார்சலுடன் வந்த ஒரு கடிதத்தில், கிருஷ்ணமூர்த்தி என்பவரின் 'மகளைக் கடத்திச் சென்று விடுவேன்' என்றும் மிரட்டப்பட்டுள்ளது. இது பற்றிய விவரம் வருமாறு:

சென்னை எழும்பூர் சேட் காலனியை சேர்ந்தவர் கிருஷ்ணமூர்த்தி.

வட்டிக் கடை வைத்திருக்கிறர்,

இவருடைய மகள் பெயர் ஸ்ரீலதா. வயது 19.

சென்னை ஸ்டெல்லா மேரீஸ் கல்லூரியில், "பி. ஏ." 3 ம் ஆண்டு படித்து வருகிறர்.

கிருஷ்ணமூர்த்திக்கு, பதிவுத் தபாலில் ஒரு பார்சல் வந்தது.

பார்சலில் இருந்து துர்நாற்றம் வீசியது. எனவே, அவருக்கு சந்தேகம் ஏற்பட்டது.

## போலீசில் புகார்

தபாலில் வந்த பார்சலை எடுத்துக்கொண்டு, எழும்பூர் போலீஸ் நிலையத்துக்குச் சென்றர். போலீசாரிடம் இதுபற்றி புகார் செய்தார்.

போலீசார், பார்சலைப் பிரித்தார்கள். மேல்புறம், துணி சுற்றப்பட்டு இருந்தது. அதை பிரித்துப் பார்த்த போது, உள்ளே ஒரு அட்டைப் பெட்டி இருந்தது.

## ஆணின் இடது கை

அதைப் பிரித்துப் பார்த்த போது, உள்ளே மணிக்கட்டுடன் துண்டிக்கப்பட்ட மனிதக் கை ஒன்று இருந்தது.

அது ஓர் ஆணின் இடதுகை அழுகிய நிலையில் இருந்ததால் நாற்றம் அடித்தது.

கையுடன், ஒரு கடிதம் இருந்தது.

அதில் எழுதப்பட்டு இருந்ததாவது:—

## மகளைக் கடத்துவேன்

"இந்த கிழமைக்குள், சென்னை செனய்நகர் தபால் ஆபீசு எதிரே உள்ள 'டெலிபோன்பூத்'தில் ரூ 15ஆயிரம் ரொக்கமாக பணம் கொண்டு வந்து வைக்க வேண்டும். இல்லாவிட்டால், உன் மகளை கடத்திக்கொண்டு போய்விடுவேன். அல்லது, உன் குடும்பத்தையே கொலை செய்து விடுவேன்."

இவ்வாறு கடிதத்தில் குறிப்பிடப்பட்டு இருந்தது

பார்சலில் அனுப்பியவரின் முகவரி "பால், 47, அய்யா முதலி தெரு, சிந்தாதிரிபேட்டை, சென்னை" என்று குறிப்பிடப்பட்டு இருந்தது.

## 5 மாதங்களில் 3 மிரட்டல் கடிதம்

இந்த முகவரி, பொய்யான முகவரியாகும் அந்த முகவரியில் பால் என்று எவரும் இல்லை. இந்த முகவரியை குறிப்பிட்டு, கிருஷ்ணமூர்த்திற்கு 5 மாதங்களுக்கு முன் 3 மிரட்டல் கடிதங்கள் வந்தன. அந்தக் கடிதங்களிலும், "பணம் கொடு. இல்லாவிட்டால் உன் மகளை கடத்திச் சென்றுவிடுவேன்" என்று குறிப்பிடப்பட்டு இருந்தது.

இந்தக் கடிதங்கள் பற்றி ஏற்கனவே கிருஷ்ணமூர்த்தி போலீசில் புகார் செய்திருந்தார். அவை, விசாரணையில் இருந்து வருகின்றன.

பார்சலில் வந்த மனிதக் கை, சென்னை பெரிய (ஜெனரல்) ஆஸ்பத்திரிக்கு பரிசோதனைக்காக அனுப்பப்பட்டது.

## சுடுகாட்டு பிணத்தின் கையா?

பரிசோதனையில் இருந்து அந்தக்கை, வயதான ஒரு ஆணின் கை என்றும், அந்தக் கை சுடுகாட்டில், ஏதாவது பிணத்திடம் இருந்து வெட்டி எடுக்கப்பட்டதாக இருக்க வேண்டும் அல்லது மருத்துவ கல்லூரி பரிசோதனைசாலையில் இருந்து திருடப்பட்டதாக இருக்க வேண்டும் என்றும் தெரிய வருகிறது.

"கையுடன் வந்த மிரட்டல் கடிதத்தால் எனக்கு பயமாக இருக்கிறது. இது பற்றி விசாரணை நடத்தி, இந்த கடிதத்தை எழுதியது யார் என்று கண்டுபிடித்து தண்டிக்க வேண்டும்" என்று போலீசில் கிருஷ்ணமூர்த்தி புகார் கொடுத்துள்ளார்.

இதுபற்றி எழும்பூர் போலீசார் தீவிரமாக புலன் விசாரித்து வருகிறர்கள்.

---

# கேட்பாரற்றுக்கிடந்த 90 கிலோ தங்கம்: அதிகாரிகள் திகைப்பு

ஐதராபாத், நவ. 6—ஐதராபாத்தில் ஒரு வீட்டில் 90 கிலோ தங்கத்தை அதிகாரிகள் கைப்பற்றினர். இந்தத் தங்கத்துக்கு யாரும் உரிமை கொண்டாடாதது அதிகாரிகளுக்கு திகைப்பை ஏற்படுத்தியிருக்கிறது.

செகந்தராபாத் நகரில் புருகுசெட்டி தெருவில் உள்ள ஒரு வீட்டில் தங்கம் பெரும் அளவில் பதுக்கிவைக்கப்பட்டிருப்பதாக அதிகாரிகளுக்கு தகவல் கிடைத்தது.

அந்த வீட்டில் ஆட்கள் யாரும் இல்லை. அதிகாரிகள் துருவித்துருவி சோதனை நடத்தி, கடைசியில் பூமிக்கு அடியில் ரகசிய அறை ஒன்று இருப்பதைக் கண்டு பிடித்தார்கள்.

அந்த ரகசிய அறைக்குள் பல பெட்டிகள். அந்தப் பெட்டிகள் நிறைய நகைகள், தங்கக் கட்டிகள்.

90 கிலோ எடையுள்ள அந்த தங்கம், மற்றும் நகைகளின் மதிப்பு ரூ. 45 லட்சம் ஆகும்.

இதுவரை இந்த தங்கநகைகள் எங்களுக்குச் சொந்தம் என்று இதுவரை யாரும் உரிமை கோரிவரவில்லை.

---

# கோட்டை எதிரே அரசு ஊழியர்கள் 7ந்தேதி மறியல்

சென்னை, நவ. 6—தமிழ்நாடு என். ஜி. ஓக்கள் நாளை 7ந்தேதி சென்னை கோட்டை எதிரே மறியல் ("தர்ணா") போராட்டம் நடத்துவார்கள்.

தமிழ்நாடு என். ஜி. ஓ.க்கள் சங்கத்தின் தலைவர் ஆர். ஏ. கூடலிங்கம் இந்த தகவலை நேற்றிரவு சென்னையில் நிருபர்களிடம் வெளியிட்டார்.

இந்த மறியலில் தமிழ் நாட்டின் பல்வேறு பகுதிகளைச் சேர்ந்த அரசு ஊழியர்கள் 250 பேர் கலந்து கொள்வார்கள் என்று அவர் கூறினார். இந்தப் போராட்டம் நாளை காலை 10 மணியிலிருந்து மாலை 5 மணி வரை நடைபெறும்.

என். ஜி ஓக்களின் முக்கிய கோரிக்கைகள் பின் வருமாறு:

1. மத்திய அரசு ஊழியர்களுக்கு அளிக்கப்படுகிற அளவில் மாநில அரசு ஊழியர்களுக்கும் பஞ்சப்படி கொடுக்கப்பட வேண்டும்.

2. அரசு ஊழியர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் படி 2 ரூபாய் வீதம் அரிசி சப்ளை செய்யப்பட வேண்டும்.

3. விலைவாசிகளைக் குறைக்க தீவிர நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும்.

7 ந்தேதி மாலை தமிழ்நாடு என். ஜி ஓக்கள் சங்கத்தின் செயற்குழு கூடி அடுத்த நடவடிக்கை பற்றி ஆலோசிக்கும் என்று கூடலிங்கம் தெரிவித்தார்.

---

## குப்பையிலிருந்து பெட்ரோல்

4-ம் பக்கத் தொடர்ச்சி

ஜின்களில் மாறுதல் எதுவும் செய்யவேண்டியிராது.

உலகில் இப்போது பெட்ரோலுக்குப் பற்றாக்குறை ஏற்பட்டுள்ளது என்பதோடு, பெட்ரோலின் விலையும் மிகவும் உயர்ந்துள்ளது.

எனவே பிரெஞ்சு நிபுணரின் கண்டுபிடிப்பானது உலகில் பெட்ரோல் பற்றாக்குறைப் பிரச்னையை தீர்த்துவிடக் கூடியதாகும் தவிர பெட்ரோலிய எண்ணெய் ஊற்று இல்லாத நாடுகள் இப்போது அன்னியச் செலாவணியை செலவிட்டு வெளிநாடுகளிலிருந்து பெட்ரோலிய எண்ணெய்களை இறக்குமதி செய்யவேண்டியுள்ளது.

பிரெஞ்சு நிபுணர் கூறும் முறையைப் பயன்படுத்தினால் உலகில் எந்த நாடும் சொந்தமாக பெட்ரோலை உற்பத்தி செய்து கொள்ள முடியும்.

---

## திருமணம்

சென்னை, நவ. 6—காஞ்சிபுரம் நகராட்சியின் ஓய்வு பெற்ற கல்வி அதிகாரி ஜி. சீனிவாசாச்சாரியின் மகன் ஸ்ரீதரனுக்கும் பாரி கம்பெனி பி. கண்ணன் அய்யங்கார் மகள் சரஸ்வதி என்கிற சரோஜாவுக்கும் இந்த மாதம் 3-ந்தேதி திருமணம் நடந்தது.

சென்னை அபிபுல்லா ரோடு எஸ். ஜி. எஸ். சபா திருமண மண்டபத்தில் நடைபெற்ற இந்தத் திருமணத்துக்கும் மாலையில் நடந்த வரவேற்புக்கும் ஏராளமான உறவினர்களும், நண்பர்களும், பிரமுகர்களும் வந்து சிறப்பித்தனர்.

## முதல் ஓட்டில் வில்சன் அரசு வெற்றி

லண்டன், நவ. 6—பிரிட்டிஷ் பார்லிமெண்டில் நேற்று நடந்த ஓட்டெடுப்பில் பிரதமர் வில்சனின் அரசு 14 ஓட்டு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது.

சில தொழில்களை அரசு எடுத்துக்கொள்வது சம்பந்தப்பட்ட தீர்மானத்தின் நடந்த ஓட்டெடுப்பில் அரசுக்கு ஆதரவாக 310 ஓட்டுகளும், எதிராக 296 ஓட்டுகளும் கிடைத்தன.



### பிரெஞ்சு நிபுணர் கண்டுபிடிப்பு

# குப்பையிலிருந்து பெட்ரோல் தயாரிப்பு: லிட்டர் 80 பைசா

பாரிஸ், நவ. 6—பிரெஞ்சு நிபுணர் ஒருவர் குப்பைகளைக்கொண்டு பெட்ரோல் தயாரித்திருக்கிறார்.

இப்பெட்ரோலை தனது காரில் ஊற்றி அவர் 32 ஆயிரம் மைல் பிரயாணம் செய்திருக்கிறார்.

மரத்துண்டுகள், சோளத் தட்டைகள், காய்கறிக் கழிவுகள் முதலியவற்றிலிருந்து செலுலோஸ் பொருளைப் பிரித்து அதைக்கொண்டு அந்த நிபுணர் பெட்ரோல் தயாரித்துள்ளார்.

இப்பிரெஞ்சு நிபுணரின் கண்டுபிடிப்பு உலகில் மாபெரும் விளைவை உண்டாக்கலாம் என்று நம்பப்படுகிறது.

இவர் தயாரித்துள்ள பெட்ரோலின் விலை மிகவும் மலிவு ஒரு லிட்டர் 80 பைசா தான்.

மேற்படி நிபுணரின் பெயர் ஹென்றி ரோத்லிஸ்பெர்கர். தான் தயாரித்துள்ள பெட்ரோலுக்கு அவர் தன்னுடைய பெயரின் முதல் எழுத்துக்களை கொண்டு 'எச். ஆர்.' என்று பெயர் வைத்துள்ளார்.

எச். ஆர். பெட்ரோலைப் பயன்படுத்தி தனது 'போர்ட்' கார் மூலம் 32 ஆயிரம் கிலோ மீட்டர் பிரயாணம் செய்துள்ளதாக அவர் கூறுகிறார்.

எச். ஆர். பெட்ரோலைப் பயன்படுத்தினால், சாதாரண பெட்ரோலைவிட அதிக "மைலேஜ்" கிடைக்கிறது என்றார் அவர்.

### விலை மலிவு

எச். ஆர். பெட்ரோலின் விலை சாதாரண பெட்ரோலின் விலையைவிடக் குறைவு. அது மட்டுமல்ல எச். ஆர். பெட்ரோல் மணம் இல்லாதது. அதைப் பயன்படுத்தினால் புகையும் ஏற்படாது. எனவே காற்றின் தூய்மை கெடும் பிரச்சினையும் இராது.

எச். ஆர். பெட்ரோலைப் பயன்படுத்துவதற்கு இப்போது கார்களில் உள்ள என்

3-ம் பக்கம் பார்க்க

## ஐ. என். டி. யு. சி. மாநாடு: இந்திரா துவக்கிவைப்பார்

புதுடெல்லி, நவ. 6-ஐ என். டி. யு. சி. மாநாடு பம்பாயில் டிசம்பர் மாதம் 28-ந் தேதி நடைபெறும். இம் மாநாட்டை பிரதமர் இந்திரா காந்தி துவக்கி வைப்பார். இந்திரா இம் மாநாட்டை துவக்கி வைப்பது இதுவே முதல் தடவையாகும்.



அரசு ஊழியர்கள் குடும்பப் பாதுகாப்புத் திட்டத்தைத் தொடர்ந்து மற்றொரு மகத்தான திட்டம்

# 1974-ஆம் ஆண்டு தமிழ்நாடு சமூகப் பாதுகாப்புத் திட்டம்



பேரறிஞர் அண்ணா பிறந்த நாளில் அறிவிக்கப்பட்டு...





பண்டித நேரு பிறந்த நாளில் செயல்படுத்தப்படுகின்றது.





அனைத்து இந்தியாவும் போற்றிப் புகழும் வண்ணம் தமிழ்நாடு அரசு பல சமுகநலத் திட்டங்களை செயல்படுத்தி வருகிறது. அரசு ஊழியர்கள் அகால மரணமடைந்தால் அவர்களது குடும்பம் நலிந்துவிடாதிருப்பதற்காக தமிழ்நாடு அரசு, அரசு ஊழியர்களுக்காக குடும்பப் பாதுகாப்புத் திட்டத்தை 1-1-74-ஆம் நாள்முதல் அமுல்படுத்தியது. இதனபடி இறந்துவிட்ட ஊழியரின் குடும்பத்திற்கு உடனடியாக ரூ. 10,000/- வழங்கப்படுகிறது.

இந்தத் திட்டத்தினைத் தொடர்ந்து தமிழக முதல்வர் மாண்புமிகு டாக்டர் கலைஞர்

**மு. கருணாநிதி** அவர்கள்,

பேரறிஞர் அண்ணா அவர்களின் 65-வது பிறந்த நாளன்று அறிவித்திட்ட

## 1974 ஆம் ஆண்டு தமிழ்நாடு சமூகப் பாதுகாப்புத் திட்டம்

தமிழகத்திலுள்ள எல்லாத் தரப்பு மக்களுக்கும் பயன்படவிருக்கும் இத்திட்டம் பண்டித நேரு பிறந்த நாளான 14-11-74 அன்று துவக்கப்படவிருக்கிறது.

இந்தத் திட்டத்தில் சொந்தமாகத் தொழில் புரிபவர்கள், ஊதியம் பெற்றுப் பணிபுரிபவர்கள் மற்றும் பொதுமக்கள் அனைவரும் பங்கெடுத்துக் கொள்ள வாய்ப்பு இருக்கிறது. சந்தாதாரர்கள் தங்கள் வசதிக்கேற்ப மாதந்தோறும் ஒரு சிறு தொகையைச் சீராகச் செலுத்தி வந்தால் அதற்கேற்ப பின்னாளில் அவருக்கு மாதந்தோறும் ஒரு கணிசமான உதவித் தொகை அரசால் வழங்கப்படும்.

இந்த உதவித் தொகை அவருடைய வாழ்நாள் முழுவதும் கிடைக்கும். ஓய்வூதிய ஆரம்பத் தேதியிலிருந்து 30 ஆண்டுகளுக்குள் சந்தாதாரர் இறக்க நேர்ந்தால் குறைந்த பட்சம் 30 ஆண்டுக் காலம் இந்த உதவித் தொகை அவரது குடும்பத்தினருக்குக் கிடைக்கும்.

எடுத்துக்காட்டாக, மாதந்தோறும் ஒருவர் 10 ரூபாய் வீதம் 25 ஆண்டுக் காலத்திற்குச் செலுத்தி வந்தால் பின்னர் அவருக்கு மாதந்தோறும் ரூ. 100/- உதவித் தொகையாகக் கிடைத்துவரும்.

மாதந்தோறும் ஓய்வு ஊதியம் கொடுப்பதோடு இத்திட்டம் நின்று விடுவதில்லை.

ஓய்வூதிய வரையறைநாள் முடிந்ததும் மொத்தத் தொகை கீழ்க்கண்டவாறு ரூ. 1,500 முதல் ரூ. 9,500 வரை கொடுக்கப்படும்.

சந்தாதாரராகச் சேர வயது வரம்பு கிடையாது. நுழைவுக்கட்டணமும் கிடையாது. சிறுவர்கள் பெயரிலும் கணக்குத் தொடங்கலாம்.

| மாதம் செலுத்தும் சந்தா | சந்தா காலம் | மாதந்தோறும் வழங்கப்படவிருக்கும் ஒய்வு ஊதியம் | ஒய்வூதிய இறுதியில் கொடுக்கப்படும் மொத்த தொகை |
|---|---|---|---|
| ரூ. 10 | 10 ஆண்டுகள் | ரூ. 20 | ரூ. 1500/- |
| ரூ. 10 | 15 ,, | ரூ. 35 | ரூ. 2500/- |
| ரூ. 10 | 20 ,, | ரூ. 60 | ரூ. 4000/- |
| ரூ. 10 | 25 ,, | ரூ. 100 | ரூ. 5500/- |
| ரூ. 20 | 20 ,, | ரூ. 100 | ரூ. 8000/- |
| ரூ. 30 | 15 ,, | ரூ. 100 | ரூ. 8000/- |
| ரூ. 60 | 10 ,, | ரூ. 100 | ரூ. 9500/- |

இத்திட்டத்தில் சேர விரும்புகிறவர்கள் தமிழகத்தில் இத்திட்டத்தில் பங்கு கொள்ளும் கீழ்க்கண்ட வங்கிகள் எதிலேனும் தொகை செலுத்தலாம்:—

### வங்கிகளின் பெயர்கள்

கனரா பாங்க்
சென்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா
இந்தியன் பாங்க்
இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க்
பஞ்சாப் நேஷனல் பாங்க்
ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா
ஸ்டேட் பாங்க் ஆப் பாடியாலா
ஸ்டேட் பாங்க் ஆப் ஹைதராபாத்
ஸ்டேட் பாங்க் ஆப் சௌராஷ்டிரா
சிண்டிகேட் பாங்க்
யுனைடெட் கமர்சியல் பாங்க்
ஆந்திரா பாங்க்; பாங்க் ஆப் மகாராஷ்ட்டிரா
பாரத் ஓவர்சீஸ் பாங்க்; பாங்க் ஆப் இந்தியா
கார்ப்பரேஷன் பாங்க்
கர்நாடகா பாங்க்; பாங்க் ஆப் மதுரை
காதோலிக் சிரியன் பாங்க
கரூர் வைஸ்யா பாங்க்
கும்பகோணம் ஸிடி யூனியன் பாங்க்
லக்ஷ்மி விலாஸ் பாங்க்
நெடுங்காடி பாங்க்
தமிழ்நாடு மர்க்கன்டைல் பாங்க்
நியூ பாங்க் ஆப் இந்தியா
தஞ்சாவூர் பர்மனென்ட் பாங்க்
விஜயா பாங்க்; தேனு பாங்க்
தமிழ்நாடு ஸ்டேட் கோ-ஆப்பரேட்டிவ் பாங்க்

முழு விவரம்பெற விரும்புகிறவர்கள் இந்த வங்கிகளின் ஏதாவதொரு கிளையுடன் அல்லது சமூகப் பாதுகாப்புத் திட்ட இயக்குநருடன் தொடர்பு கொள்ளலாம்.

இத்திட்டத்தில் விரைந்து சேர்ந்து நிறைந்த பயனை எட்டுங்கள்.

வெளியீடு:
இயக்குநர்,
தமிழ்நாடு சமூகப் பாதுகாப்புத் திட்டம்,
4-வது மாடி - குறளகம்,
சென்னை-1

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.
Chief Editor: S. V. G. Sowrirajulu. Honorary Editor: N. Muthukumarasami.